அச. ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையும்
தான்புக் கழுந்து மளறு— (பேதைமை)

அரு. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்— (புல்லறிவாண்மை)

அசு. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு(ம்) நணித்து— (இகல்)

அஎ. வறியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை— (பகைமாட்சி)

அஅ. வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை— (பகைத்திறந்தெரிதல்)

அகூ. வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு— (உட்பகை)

கூ0. ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்—(பெரியாரைப்பிழையாமை)

கூக. அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்—(பெண்வழிச்சேறல்)

கூஉ. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியார்
இன்சொ லிழுக்குத் தரும்— (வரைவின்மகளிர்)

கூங. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்— (கள்ளுண்ணாமை)

கூச. அகடாரா ரல்லல் உழப்பர் சூதென்னும்
முகடியான் மூடப்பட் டார்— (சூது)

திருக்குறட் கோவை உகூ

கூரு. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து— (மருந்து)

---

ஒழிபியல் - அதி. ௰கூ - (கூகூ - ௱ஆ).

கசு. குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து— (குடிமை)

௧௭. மருகதோமற் றானேமையும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து— (மானம்)

௧௮. ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல்— (பெருமை)

௧௯. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
தொலையவலார் கண்ணுங் கொளல்— (சான்றாண்மை)

௨௦. எண்பதத்தா லெய்த லெளிதென்ப யாமாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு— (பண்புடைமை)

௨௧. பொருளாறு மெல்லாமென் றீயா திவறும்
மருளானு(ம்) மாணாப் பிறப்பு— (நன்றியில்செல்வம்)

௨௨. கருமத்தா னாணுத னாணுத் திருநுதல
நல்லவர் நாணுப் பிற— (நாணுடைமை)

௨௩. இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு— (குடிசெயல்வகை)

௨௪. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்— (உழவு)

௨௫. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு(ம்) நசை— (நல்குரவு)

௨௬. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின்— (இரவு)

௨௭. கரப்பவாக் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்— * (இரவச்சம்)

௨௮. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்— (கயமை)

திருக்குறட்கோவை - நூற்றெட்டு முற்றிற்று.



## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௰௯ | ௨௭ | சக்கியாசி | சந்நியாசி |
| ௨௩ | ௩ | மழறு | மளறு |
| ௨௫ | ௨௨ | அவன | அவர் |
| ௪௯ | ௩௰ | ஒழித்தூண்பான் | ஒளித்தூண்பான் |
| ௪௮ | ௨௰ | பாமில்லை | பாவமில்லை |
| ௫௧ | ௰௬ | இறையவன் | இறையவர் |
| ௫௯ | ௨௭ | இரசு | இரசசு |
| ௭௫ | ௰௫ | மெய்பொருள் | மெய்ப்பொருள |
| ௮௰ | ௨௪ | வகுத்தகையால் | வகுத்தவகையால் |

தெய்வப் புலமைத் திருவள் ளுவர்தந்த திருக்குறளின்
மெய்வைத்த சார முணர்த்துமிந் நூலை வியனுலகில்
சைவத் திருமக்க ளேயன்றி யேனைத் தமிழ்மக்களும்
கைவைத் தறிந்துய்ய மாறருள்வா யெங்கள் கண்ணுதலே.

தி. சா. பரமசிவன்.



ஜோபில் பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை.